## 𑌅𑌥 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍋𑌽𑌨𑍁𑌵𑌾𑌕𑌃

இவ்வனுவாகம்முதல் 8 அனுவாகங்களால் 'ஸ்ரீருத்திரன்தான் எல்லாப் பொருள்களுக்கும் யஜமானன், எல்லாப் பொருள்களும் அவரிடந்தானிருக்கிறது, அவரே எல்லாப் பொருள்களாயு மிருக்கிறார், எல்லாப் பொருள்களிலும் அந்தர்யாமியாயு மிருக்கிறார்' என்று நிரூபணம் செய்து நமஸ்கரிக்கப்படுகிறார். அதிலும் முதலில் உலகத்திலுள்ள ஒவ்வொரு வஸ்துவுக்கும் ருத்திரன் ஈசனாயிருப்பதால் எல்லாவற்றிற்கும் அவரே யஜமானர் என்பதை ஸ்தாபிப்பதற்கு துவக்கப்படுகிறது.

𑌨𑌮𑍋 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌬𑌾𑌹𑌵𑍇 𑌸𑍇𑌨𑌾𑌨𑍍𑌯𑍇 𑌦𑌿𑌶𑌾𑌂𑌚
𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌬𑌾𑌹𑌵𑍇 | உயர்ந்த தங்கத்தால் செய்யப்பட்ட காப்பு மோதிரம் முதலியவைகளை அணிந்துகொண் டிருக்கும் கைகளை யுடையவரும் |
| 𑌸𑍇𑌨𑌾𑌨𑍍𑌯𑍇 | (ஜீவர்களாகிற)ஸைந்யத்தை தூண்டுகிறவரும் |
| 𑌦𑌿𑌶𑌾𑌂𑌚 | (கிழக்கு முதலிய) திசைகளுக்கு |
| 𑌪𑌤𑌯𑍇 | யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

மற்றவேதவாக்கியங்கள் ஸ்ரீ ருத்திரனை கால்முதல் தலைவரையிலும் அந்தந்த இடங்களில் சிறந்த ஆபரணங்

களை அணிந்து கொடிருப்பவராகவும், தங்கமயமான வடிவமுள்ளவராகவும், கூறுகின்றன. ஆகிலும் வரதானம் செய்யும் சமயத்தில் கைகளை முன் வருவதால் அவைகளைக் கண்டு மற்றவைகளை கவனியாமல் தங்கமயமான ஆபரணமணிந்த கைகளையுடையவர் என்று இவ்விடத்தில் கூறப்பட்டது. கிழக்கு முதலிய திசைகளுக்கு இந்திராதி தேவர்கள் அதிபர்கள் என்று பிரசித்தி யிருந்த போதிலும் அவர்கள் முக்கியாதிகாரிகளல்லர். தேவர்கள், ஸித்தர்கள், கந்தர்வர்கள், மனிதர்கள், இவர்களுடைய கூட்டத்திற்கு யஜமானரான ஸ்ரீ ருத்திரனை சூர்யமண்டலத்தில் தங்கமயமான வடிவத்துடனிருப்பவராக உபாஸனை செய்து அதனால் அவர்கள் அந்தந்த திசைகளுக்கு யஜமானர்களாயானார்கள். ஆதலால் இந்திராதி தேவர்கள் ஸ்ரீ ருத்திரனுடைய சேவகர்கள். ஸ்ரீ ருத்திரனே திக்குகளுக்கு முக்கியாதிகாரி என்று இரண்டு விசேஷணங்களால் தெரிவிக்கப்பட்டது.

நமோ வ்ருக்ஷேப்யோ ஹரிகேசேப்ய: பசூநாம் பதயே நம: ।

ஹரிகேசேப்ய: (ஸத்வம், ரஜஸ், தமஸ், என்ற மூன்று குணங்களுடன் கூடினபல விதமான கர்மங்களாகிற) பச்சை இலையோடு கூடினதாயிருக்கிற

வ்ருக்ஷேப்ய: ஸம்ஸாரமாகிற மரத்திற்கு காரணமாயிருப்பவராயும்

பஶூநாம் — எல்லா பிராணிகளுக்கும்

பதயே — யஜமானரா யிருப்பவருமான ஸ்ரீ ருத்திரனுக்கு

நமோ நம: — அடிக்கடி நமஸ்காரம்.

ஒவ்வொரு கர்மாவும் சாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூன்றுவிதமாய் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவ்வித கர்மங்களை சொல்லக்கூடிய கர்மகாண்டமென்று பெயர் கொண்ட வேதபாகம் தலையிலிருக்கும் மயிர்போல் இவ்வளவென்று கணக்கிட முடியாததாகவும் ஸம்ஸாரமாகிற மரத்தைக் காப்பாற்றுகிறதாகவு மிருக்கிறது. (இவ்விடத்தில் சம்சாரம் என்ற பதத்திற்கு லோகம் என்ற பொருள் கொள்ளவேண்டும்.) மேல் சொல்லிய மரத்திற்கு ஸ்ரீ ருத்திரன் காரணமாயிருப்பதால், ஒரு யஜமானன் தன் வசமுள்ள பசு, எருமை, முதலியவைகளை கயற்றினால் கட்டி வேலை வாங்குவதுபோல் ஸம்ஸாரத்திலுட்பட்ட எல்லா ஜீவர்களையும் ஸம்ஸார பாசத்தால் (ஸம்ஸார பாசம்=அவித்தை, மாயை) கட்டி தனது உத்திரவு ரூபமான வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் கர்மங்களை செய்யும்படி ஏவுகிறார். ஆதலால் உலகிலுள்ள எல்லா ஜீவர்களும் பசுக்களாகவும் ஸ்ரீருத்திரன் அவைகளுக்கு யஜமானராகவு மாகிறார் என்று இரண்டு விசேஷணங்களால் தெரிவிக்கப்பட்டது.

நம: ஶஷ்பிஞ்ஜராய த்விஷீமதே பதீநாம் பதயே நம:।

ஶஷ்பிஞ்ஜராய — இளம் புல்போல் மஞ்சளும் சிவப்

| | |
|---|---|
| | பும் கலந்த நிறமுள்ளவராயும் |
| ஸ்விஷீமதே | (அறிவாகிற) பிரகாசமுள்ளவரா யும் |
| வயீநாம | (பாசுபதம், பாஞ்சராத்திரம், முத லிய வேத பாஹ்யமான) தாந் திரிக மார்க்கங்களுக்கு |
| வதயெ | (அவைகளை உண்டுபண்ணுவதால்) யஜமானராய் ஏற்பட்ட ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமொநமஃ | அடிக்கடி நமஸ்காரம். |

ஸ்வதிஜாய என்ற பதத்திற்கு ஸாத்விகம், ராஜ ஸம், தாமஸம் என்று மூன்று விதமாயுள்ள ஜீவர்களின் கர்மங்களை அந்தந்த வருப்பில் அவரவர்களை சிருஷ்டிப் பதில் சகாயமாய் எடுத்துக்கொள்ளுகிறார் என்ற கருத்தை இவ்விடத்தில் கொள்ளவேண்டும். "யாவெதவாஹ்யா ஸ்ம்ருதயஃ யாஶ்சகாஶ்ச குத்ருஷ்டயஃ। ஸர்வாஸ்தா நிஷ் ஃபலாஃ ப்ரெத்ய தமோநிஷ்டாஹிதாஃஸ்ம்ருதாஃ॥" "வேதத்தை அனுஸரியாமல் அதை நிந்தித்துக்கொண்டு அதற்கு எதி ரிடையாய் இருக்கும் கிரந்தங்கள் பயனற்றவைகள் அவைகளில் சொல்லியபடி நடந்தால் க்ஷேமங் கிடைக் காது. இறந்த பிறகும் நரகங்களை அனுபவிக்க வேண் டும்" என்று மனுவால் 12-வது அத்தியாயம் 95-ம் ச்லோகத்தில் தாந்திரிக கிரந்தங்கள் நிந்திக்கப்பட்டிருக் கின்றன. ஆகிலும் அன்னிந்தை வேதத்தில் சொல்லிய

கர்மங்களில் அதிகாரம் பெற்றவர்களைப்பற்றியே யொழிய மற்றவர்களைக் குறித்தல்ல. வேத பாஹ்யர்கள் தாந்திரிக மார்க்கப்படி நடந்து அதனால் பகவானை திருப்தி செய்து வைதிக மார்க்கத்தில் அதிகாரமுள்ளவர்களாய் மறுபிறப்பில் பிறந்து கிரமமாய் வைதிககர்மங்களை அனுஷ்டித்து க்ஷேமமடையவேண்டியவர்களாயிருக்கிறார்கள். "சாண்டில்யர் என்ற ரிஷி பாஞ்சராத்திரவழிப்படி விஷ்ணுவை பூஜைசெய்தார். அதனால் திருப்தியடைந்த பகவான் நீண்டகாலம் கழிந்து வேதமார்க்கத்தில் சிரத்தையுள்ளவனாய்ப் பிறந்து அதன்படி ஆராதனம் செய்து க்ஷேமமடைவாய் என்று அனுக்கிரஹம்செய்தார்" என்று வாஸிஷ்டலைங்க புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் வேத பாஹ்யர்களைக் கைதூக்கி விடுவதற்காக எல்லாவற்றையுமறிந்த ஸ்ரீ ருத்திரன் தாந்திரிக மார்க்கங்களைச் செய்திருப்பதால் அவரே நம்மைக் கெடுத்துவிட்டார் என்று சொல்லுவதற்கில்லை. புத்தாவதாரம் செய்து வேத விருத்தமாய் உபதேசித்ததின் கருத்துமிதுவே. சிலரை வைதிக மார்க்கத்தில் சிரத்தையுள்ளவர்களாகவும், சிலரை அவ்வழியில் நம்பிக்கை யில்லாதவர்களாகவும் சிருஷ்டிப்பதால் பகவானுக்கு வைஷம்யநைர்க்ருண்யங்கள் பிரசங்கிக்காது. ஏனென்றால் அந்தந்த பிராணிகளின் முன் ஜந்மத்தின் கர்மப்படி அவரவர்களை அவ்வவ்விதம் உண்டுபண்ணுகிறார். காரணமன்றி செய்யவில்லை என்று இரண்டு விசேஷணங்களால் தெரிவிக்கப்பட்டது.

நமோ ப்ரஹ்மண்யாய விஷ்ணவே நாராயணாய நம:॥

| | |
|---|---|
| பப்லுஶாய | விருஷபத்தின் மேலிருப்பவரும் |
| விவ்யாதினே | (பாபிகளை) நன்கு அடிக்கிறவரும் |
| அன்னானாம் | உணவு பொருள்களுக்கு |
| பதயே | யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமோ நம: | அடிக்கடி நமஸ்காரம். |

"யஜ்ஞாத் பவதி பர்ஜன்ய:" "பர்ஜன்யாத் அன்னஸம்பவ:" யாகம் முதலிய நல்ல கர்மங்களிலிருந்து மழை பெய்கிறது. அதனால் உணவுபொருள்கள் விளைகின்றன என்று கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த தர்மமே ஸ்ரீ ருத்திரனுக்கு காளை உருவத்துடன் வாஹனமாயிருப்பதால் தர்மத்தாலுண்டாகும் அவர் அன்னத்திற்கு யஜமானர் என்றதைப்பற்றி சொல்லவும் வேண்டுமோ. அன்னத்தைக்கொடுத்து சுகத்தை உண்டுபண்ணுவதுபோல் "யே அன்னேஷு விவித்யந்தி, யேஷாமன்னமிஷவ:", என்று மேலே சொல்லப்போகிறபடி உணவு பொருள் நிமித்தமாகவே பல துன்பங்களை விளைவிக்கிறவராகவுமிருக்கிறார். ஆதலால் ஸ்ரீ ருத்திரன் அன்னபதி யாகிறாரென்று இரண்டு விசேஷணங்களால் தெரிவிக்கப்பட்டது.

நமோ ஹரிகேஶாயோபவீதினே புஷ்டானாம் பதயே நம: ॥

| | |
|---|---|
| ஹரிகேஶாய | கருத்த மயிரையுடையவரும் (நித் |

டயுவாவும்)

உபவீதிநே — யஜ்ஞோபவீதமுள்ளவரும்

வரிஷ்டாய — (பிரும்மா முதல் ஸ்தம்ப பரியந்தமான ஜகத்தில், அறிவு, ஐச்வர்யம், வீர்யம், இவைகள்) நிறைந்த ஜீவர்களுக்கு

பதயே — யஜமானருமான ஸ்ரீருத்திரனுக்கு

நமோ நமஃ — அடிக்கடி நமஸ்காரம்.

த்வம் தேவேஷு ப்ராஹ்மணோஸி அஹம் மனுஷ்யேஷு ப்ராஹ்மணோ வை ப்ராஹ்மணம் உபதாவதி, உப த்வா தாவாமி என்று ஸாமவேதத்தில் ஸ்ரீ ருத்திரனை தேவர்களுக்குள் பிராம்ஹணன் என்று சொல்லியிருக்கிறது. இவ்வபிப்பிராயத்தை இவ்விடமுள்ள யஜ்ஞோபவீதிநே என்ற பதம் தெரிவிக்கிறது. அதனால் மனிதர்களுக்குள் பிராம்மணன் எவ்விதம் மேல்பட்டவனோ அவ்விதமே ருத்திரனும் மற்றெல்லா தேவர்களுக்கும் மேலானவர் என்று ஏற்படுகிறது. இத்துடன் பிராம்ஹணன் ஸ்ரீ ருத்திரனை பூஜித்தே தீரவேண்டுமென்றும் தெரிகிறது. 'ஶூலீ ப்ராஹ்மணைஸ்ஸதா பூஜனீயோ வ்ருஷத்வஜ:' என்று பராச்ர ஸம்ஹிதையிலும் கூறப்பட்டிருக்கிறது. மேலும் ஸ்ரீ ருத்திரன் எப்பொழுதும் யௌவனப்பருவ முள்ளவராகவே யிருப்பதால் மற்றெல்லோருக்கும் புஷ்டியைக் கொடுப்பதற்குச் சக்தியுள்ளவராயுமிருக்கிறார். மேற்சொல்லிய இரண்டு காரணங்க

வால் பிரும்மா முதல் ஸ்தம்ப பர்யந்தமான லோகத்தில் புஷ்டியை ஸ்ரீ ருத்திரனே கொடுக்கிறார். ஆதலால் அவரே புஷ்டிபதியென்று இரண்டு விசேஷணங்களால் தெருவிக்கப்பட்டது.

𑌨𑌮𑍋 𑌭𑌵𑌸𑍍𑌯 𑌹𑍇𑌤𑍍𑌯𑍈 𑌜𑌗𑌤𑌾𑌂 𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌭𑌵𑌸𑍍𑌯 | ஸம்ஸாரத்திற்கு |
| 𑌹𑍇𑌤𑍍𑌯𑍈 | ஆயுதமாயிருப்பவரும் |
| 𑌜𑌗𑌤𑌾𑌂 | (ஸ்தாவர, ஜங்கம ரூபமான) உலகங்களுக்கு |
| 𑌪𑌤𑌯𑍇 | யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| 𑌨𑌮𑍋𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம் |

மேற்சொன்ன 𑌪𑌶𑍂𑌨𑌾𑌂 𑌪𑌤𑌯𑍇𑌨𑌮𑌃 என்றதிலேயே இம்மந்திரத்தில் கூறிய 𑌜𑌗𑌤𑌾𑌂𑌪𑌤𑌯𑍇 என்றதின் பொருள் சொல்லப்பட்டிருக்கிறது, ஆகிலும் ஸம்ஸார பாசத்தால் ஜீவர்களைக் கட்டுவதால் ஸ்ரீ ருத்திரன் 𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑌿 யாகிறார் என்று முன் கூறப்பட்டதின் கருத்து. தன்னை உபாஸிப்பவர்களுக்கு ஸம்ஸார பாசத்தை அறுப்பதால் ஸ்ரீ ருத்திரன் 𑌜𑌗𑌤𑍍𑌪𑌤𑌿 யாகிறார் என்று பின் சொன்னதின் கருத்து. ஆதலால் 𑌪𑍌𑌨𑌰𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑌂 என்ற தோஷம் வராது. (𑌪𑍌𑌨𑌰𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑌂 = ஒருதரம் சொன்னதையே மறுபடியும் திரும்பிச் சொல்லுதல்.)

நமோ ருத்ராயாததாவிநே க்ஷேத்ராணாம் பதயே நம: ।

| | |
|---|---|
| ருத்ராய | (சம்சாரத்தில் ஏற்படக்கூடிய) துக்கத்தை விரட்டுகிறவரும் |
| ஆததாவிநே | ஞாண் ஏற்றப்பட்ட வில்லினால் காப்பாற்றுகிறவரும் |
| க்ஷேத்ராணாம் | (இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே என்று கீதையில் சொல்லியபடி) சரீரங்களுக்கு |
| பதயே | யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமோ நம: | அடிக்கடி நமஸ்காரம். |

உலகத்தில் தேசத்திற்கதிபதியான அரசன், தனது தேசத்தில் வசிக்கும் ஜனங்களை கஷ்டங்களினின்றும் ரக்ஷிக்கிறான். அதிலும் தன்னை சேர்ந்தவர்களுக்கு விசேஷமான சௌகரியத்தைச்செய்து சுகத்தைக் கொடுக்கிறானென்பது யாவருமறிந்த விஷயம். அதுபோல் ஸ்ரீ ருத்திரனும் துஷ்டநிக்ரஹம் முதலிய கார்யங்களால் ஜீவராசிகளைக் காப்பாற்றுகிறார். தன்னை பஜிப்பவர்களுக்கோ பேரானந்தத்தைக் கொடுக்கிறார். இவ்வபிப்ராயங்களை வெளியிடுவதற்காக இவ்விடத்தில் இரண்டு விசேஷணங்கள் போடப்பட்டன.

நம: ஸூதாயாஹந்த்யாய வநாநாம் பதயே நம: ।

| | |
|---|---|
| ஸூதாய | (உலகமாகிற தேரை யோட்டுகிற) சாரதியாயும் |
| அஹந்த்யாய | ஜகத்தின் விகாரமான ஸுக து:க்கம் முதலியவைகளால் தாக்கத் தகாதவராயும் (அதன் சம்பந்த மற்றவராயும்) |
| வநாநாம் | காடுகளுக்கு |
| பதயே | யஜமானராயுமிருக்கிற ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமோ நம: | அடிக்கடி நமஸ்காரம். |

கீ ।]

ஈஶ்வர: ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேऽர்ஜுந திஷ்டதி ।
ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா ॥

என்று கீதையில் சொல்லியபடி ஸ்ரீ ருத்திரன் உலகமாகிற தேரை ஓட்டிவருவதால் அதன் ஏகதேசமான காடுகளுக்கு யஜமானராயிருப்பது ஆச்சரியப்படத்தக்கதில்லை என்று நிரூபணம்செய்வதற்காக ஸூதாய என்ற பதமும், ஜகத்தை நியமனம் செய்துகொண்டிருந்தபோதிலும் அதன் விகார சம்பந்தம் ஸ்ரீருத்திரனுக்குக் கிடையாது என்ற அபிப்ராயத்தைத் தெரிவிப்பதற்காக அஹந்த்யாய என்ற பதமும் இவ்விடத்தில் போடப்பட்டது.

நமோ ரோஹிதாய ஸ்தபதயே வ்ருக்ஷாணாம் பதயே நம:

𑌰𑍋𑌹𑌿𑌤𑌾𑌯 — சிவப்பு நிறமுள்ளவரும்

𑌸𑍍𑌥𑌪𑌤𑌯𑍇 — (எங்கு)மிருந்து காப்பாற்றுகிற வரும்

𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 — மரங்களுக்கு

𑌪𑌤𑌯𑍇 — யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு

𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 — அடிக்கடி நமஸ்காரம்.

ஓ ருத்திரனே! நீர் எல்லாப் பொருள்களிலுமிருந்துகொண்டு அவைகளைக் காப்பாற்றிக்கொண்டிருப்பதால் மரத்தையும் நீர்தான் காப்பாற்றுகிறீர். மரங்கள் சிவப்பு நிறமுள்ள தளிருள்ளவைகளாயிருப்பதால் நீர் அவைகளிலிருக்கிறீர் என்று ஊஹிப்பதற்கு இடமேற்படுகிறது. ஆதலால் எனது மரங்களைக் காப்பாற்றவேண்டும். அதற்காக உம்மை அடிக்கடி வணங்குகிறேன் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

𑌨𑌮𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌣𑍇 𑌵𑌾𑌣𑌿𑌜𑌾𑌯 𑌕𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 ॥

𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌣𑍇 — ஏழு கோடி மஹா மந்திரங்கள், வேத ரஹஸ்யங்களான உபநிஷத்துக்கள் இவைகளுக்கு யஜமானராயும்

𑌵𑌾𑌣𑌿𑌜𑌾𑌯 — வியாபாரிகளின் சமூகமாயிருப்பவராயும்

𑌕𑌕𑍍𑌷𑌾𑌣𑌾𑌂 — புதர்களுக்கு

𑌪𑌤𑌯𑍇 — யஜமானராயிருப்பவருமான ஸ்ரீ ருத்திரனுக்கு

𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 — அடிக்கடி நமஸ்காரம்.

ஓ ருத்திரனே! வியாபாரிகள் பொருள்களை வாங்குவதற்காகவும், விற்பதற்காகவும் உலகமெங்கும் சஞ்சரித்து எல்லா லோகசமாசாரங்களையும் நன்கு அறிந்து கொள்வார்கள். அவர்களைப்போல நீரும் அநந்த ஜீவர்களைக் காப்பாற்றுவதற்காக எங்குமிருந்து திரிந்து எல்லாவற்றையும் அறிந்துகொள்ளுகிறீர். மேலும் மனதினாலே ஊஹிப்பதற்கு முடியாத 7 கோடி மஹாமந்திரங்களையே தேராக வைத்துக்கொண்டிருக்கிறீர். ஆதலால் மனிதன் சஞ்சரிப்பதற்கு முடியாத புதர்களுக்கு நீர் யஜமானராயிருப்பது ஆச்சரியமல்ல. அவ்வித புதர்களுக்குள் அகப்பட்டுக்கொண்டு திண்டாடாமலிருக்கும்படி என்னைக் காக்கவேண்டும். அதற்காக உம்மை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

𑌨𑌮𑍋 𑌭𑍁𑌵𑌂𑌤𑌯𑍇 𑌵𑌾𑌰𑌿𑌵𑌸𑍍𑌕𑍃𑌤𑌾𑌯𑍌𑌷𑌧𑍀𑌨𑌾𑌂 𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 ।

𑌭𑍁𑌵𑌂𑌤𑌯𑍇 — பூமியை சிருஷ்டி செய்பவரும்

𑌵𑌾𑌰𑌿𑌵𑌸𑍍𑌕𑍃𑌤𑌾𑌯 — தன்னைப் பூஜிக்கும் பக்தர்களிடத்தில் (விசேஷமாய்) இருப்பவரும்.

ஓஷதீநாம் — ஓஷதிகளுக்கு
பதயே — யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு
நம: — அடிக்கடி நமஸ்காரம்.

ஓ ருத்திரனே! நீர் பூமியை உண்டுபண்ணினீர், அகாயோஹ்யேஷ காயவாந் (சரீரமில்லாதவரா யிருந்த போதிலும் பக்தர்களின் சரீரத்தையே பகவான் தனது சரீரமாய் வைத்துக்கொள்ளுகிறார்) என்று சொல்லியபடி உம்மை எவன் பஜிக்கிறானோ அவனிடத்தில் நெருப்பில் காய்ச்சப்பட்ட இரும்பின் நெருப்புபோல் விசேஷஸான்னித்யஞ்செய்து அன்னங்களை அவன் வாயிலாக அனுபவிக்கிறீர். ஆதலால் நீர் பூமியிலுண்டாகும் நெல் பயிர் முதலிய ஓஷதிகளுக்கு யஜமானராகிறீர், ஆதலால் எனது நிலங்களில் விளையும் ஓஷதிகளுக்கு ஒருவித கெடுதியும் ஏற்படாமல் காக்கவேண்டும். அதற்காக உம்மை அடிக்கடி நமஸ்காரம் செய்கிறேன் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

உச்சைர்கோஷாயாக்ரந்தயதே பத்தீநாம்பதயே நம: ।

உச்சைர்கோஷாய — (யுத்தகளத்தில்) உரத்து சப்தம் போடுகிறவராயும்
ஆக்ரந்தயதே — சத்ருக்களைக் கதறும்படி அடிப்பவராயும்

| | |
|---|---|
| பத்தீநாம் | காலாட்படைகளுக்கு |
| பதயே | யஜமானருமான (ஸ்ரீ ருத்திரனுக்கு) |
| நமோ நமஃ | அடிக்கடி நமஸ்காரம் |

ஓ ருத்திரனே! சத்துருக்களைக் கொல்வதற்கு உமக்குக் காலாட்படைகள் வேண்டியதில்லை. அவைகளில்லாமலும் நீர் தனியே சத்துருக்களைக் கொன்றுவிடுவீர். உமக்கு ஆயுதங்களும் வேண்டியதில்லை. ஸங்கல்பமாத்திரத்திலேயே எதிராளியை வென்றுவிட சாமர்த்தியமுண்டு. சிரிப்பினால் திரிபுராஸுரனையும், பார்வையால் மன்மதனையும், நகத்தால் யமனையும் வென்றிருக்கிறீர். அப்பேர்ப்பட்ட உமக்கு ஆயுதங்கள், தேர்கள், காலாட்படைகள் முதலியவை அலங்காரங்களே. ஆதலால் எனது சத்துருக்களைக் கொன்று எனக்கு நன்மையைச் செய்யவேண்டும். அதற்காக உம்மை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன் என்று இதனால் பிரார்த்திக்கப் பட்டது.

நமஃ க்ருத்ஸ்நவீதாய தாவதே ஸத்வநாம் பதயே நமஃ ।

| | |
|---|---|
| க்ருத்ஸ்நவீதாய | (ஜகத்திற்கு அதிஷ்டானமாயிருப்பதாலும், அந்தர்யாமியாயிருப்பதாலும்,) உலகம்முடியவியாபித்திருப்பவரும் |

| | |
|---|---|
| யாவஷெதி | (பக்தர்கள் போகுமிட மெல்லாம் ரக்ஷிப்பதற்காக பின் அனுஸ ரித்து) ஓடுபவரும். |
| ஸக்ஷுடிராம் | (எல்லா கர்மங்களையும் தன்னி டம் (ஸ்ரீ ருத்திரனிடம் அர்ப ணம் செய்கிறவர்களும், த்ரி கரண சுத்தி யுள்ளவர்களு மான) ஸாதகர்களுக்கு |
| வதயெ | யஜமானருமான (ஸ்ரீ ருத்திரனு க்கு) |
| நமொநமஃ | அடிக்கடி நமஸ்காரம். |

ஓ ருத்திரனே; நீர் அவையவைகளை அந்தந்த காரியங்களைச் செய்யும்படி ஆண்டுகொண்டு எங்குமி ருக்கிறீர். ஆதலால் தன்னை பஜிப்பவன் எங்குசென்ரு லும் அந்தந்த இடங்களில் நன்மையே உண்டாகும்படி செய்கிறீர். அவர்கள் கோஷ்டியில் அடியேனையும் பதிவுசெய்துகொண்டு எல்லா கஷ்டங்களிலிருந்தும் காக்கவேண்டும். அதற்காக உம்மை அடிக்கடி நமஸ் காரம் செய்கிறேன் என்று இதனுல் பிரார்த்திக்கப் பட் டது.

சுயத்ருதீயாநுவாகஃ

நமஃ ஸஹமாநாய நிவ்யாயிந ஆவ்யாயிநீநாம் வதயெ நமஃ ।

| | |
|---|---|
| ஸஹமாநாய | சத்துருக்களை அவமதிக்கிறவராயும், அல்லது பக்தர்களின் குற்றங்களைப் பொருத்துக்கொள்பவராயும் |
| நிவ்யாயிநே | நன்கு அடிக்கிறவராயும் |
| ஆவ்யாயிநீநாம் | நான்கு பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு அடிக்கும் சூரத்தன்மையுள்ள ஸைந்யங்களுக்கு |
| பதயே | யஜமானரா யிருப்பவருமான (ஸ்ரீ ருத்திரனுக்கு) |
| நமோநம: | அடிக்கடி நமஸ்காரம். |

ஓ ருத்திரனே; நீர் சத்துருக்களை நன்கு அடிப்பவரா யிருப்பதால் நான்கு பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு அடிக்கும் சூரர்களான சைந்யங்களுக்கு யஜமானனா யிருப்பவனும் நீரே. ஆகிலும் தனனைப் பஜிப்பவர்கள் எவ்வளவு குற்றங்கள் செய்தபோதிலும் அவர்களிடம் உமது பராக்கிரமத்தைக் காட்டாமல் பொருத்துக்கொள்ளுகிறீர். ஆதலால் எனது குற்றங்கள் யாவையும் பொருத்துக்கொண்டு காப்பாற்றவேண்டும். அதற்காக உம்மை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

நம: ககுபாய நிஷங்கிணே ஸ்தேநாநாம் பதயே நம:।

| | |
|---|---|
| ககுபாய | (திருடர்களுக் கெல்லாம்) பெரியவரும் |

| | |
|---|---|
| நிஷம்கிணே | சக்தியுள்ளவருா் |
| ஸெநாநாம் | மறைந்திருந்து திருடும் திருடர்களுக்கு |
| பதயெ | யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமொநமஃ | அடிக்கடி நமஸ்காரம், |

ஓ ருத்திரனே; ஒரு கூட்டத்திற்கு தலைவனு யிருப்பவன் அக்கூட்டத்திலிருக்கும் அனைவர்க்கும் அதிக சக்தி வாய்ந்தவனு யிருக்கவேண்டும். அவ்வித மிருப்பவன் நிச்சயமாய் உமது அம்சம்வாய்ந்தவனே. ஆதலால் ஒளிந்திருந்து திருடும் திருடர்களின் தலைவன் உருவமா யிருப்பவரும் நீரே. ஆதலால் அவர்களின் உபத்திரவம் நீங்குவதற்காக உம்மை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன் என்று இதனுல் பிரார்த்திக்கப்பட்டது.

குறிப்பு:—ஓர் கூட்டத்திற்கு தலைவனுயிருப்பவன் தெஜஃஸ்ரீஃகீர்த்திரைஸ்வர்யம் ஹ்ரீஸ்த்யாகஃ ஸௌஜம் மஃ। வீர்யம் திதிக்ஷா விஜ்ஞானம்யத்ரயத்ர ஸமொம்ஶகஃ॥ (எந்தஎந்த இடத்தில், பிரபாவமோ, சம்பத்தோ, நல்ல பெயரோ, பிரபுத்வமோ, நிந்திக்கப்பட்ட கார்யத்தை செய்வதில் திருப்தி யில்லாமையோ, கொடுப்பதோ, அழகோ, பாக்கியமோ, பலமோ, பொருமையோ. அதிகமான அறிவோ, இருக்கிறதோ அது எனது விபூதி) என்று பகவானே நேரில் சொல்லியபடி. ஸ்ரீ ருத்திராம்சம் வாய்ந்தவனு யிருக்கவேண்டுமாதலால்

மேல் மந்திரங்களில் கூறப்படும் அந்தந்த திருடர்களுக்கும் ஸ்ரீ ருத்திரனே யஜமானனென்று சொல்லப்படுவதாகக் கருதவேண்டும். அந்தந்த மந்திரங்களிலிருக்கும் விசேஷணங்களால் யஜமானனின் உருவம் சுட்டிக்காட்டப்படுகிறது என்று அறியவேண்டும்.

| | |
|---|---|
| நிஷங்கிணே | தனுஸ்ஸில் தொடுப்பதற்காகக் கையி லெடுக்கப்பட்ட பாணத்தை யுடையவரும் |
| இஷுதிமதே | அம்பறாத்தூணி யுள்ளவரும் |
| தஸ்கராணாம் | பிரகாசமாய் திருடும் திருடர்களுக்கு |
| பதயே | யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமோ நம: | அடிக்கடி நமஸ்காரம். |

ஓ ருத்திரனே; தீவட்டிக்கொள்ளை முதலிய திருடுகள் உம்மால் தூண்டப்பட்டே நடைபெறுகிறது. ஆதலால் அவர்களால் எனக்கு கெடுதல் ஏற்படாமலிருப்பதற்காக உம்மை அடிக்கடி நமஸ்காரம் செய்கிறேன் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

நமோ வஞ்சதே பரிவஞ்சதே ஸ்தாயூநாம் பதயே நம: ।

| | |
|---|---|
| வஞ்சதே | ஒருவனுக்கு வேண்டியவனா யிருப்பவன்போ லிருந்துகொண்டு |

அவனது சாமானை வாங்குவது, விற்பது இவைகளில் சில சந்தர்ப்பங்களில் மோசம்செய்து பணத்தைத் திருடுகிறவரும்,

வஸிவஙுெத — மேற்சொல்லியபடியே எப்பொழுதும் ஏமாற்றித் திருடுகிறவரும்

ஷாய-ூ-நாம — வேண்டியவன்போ லிருந்துகொண்டு பிறருக்குத் தெரியாமல் பொருளை அபஹரிக்கும் திருடர்களுக்கு

வ-தயெ — யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு

நமொ-நமஃ . — அடிக்கடி நமஸ்காரம்.

ஓ ருத்திரனே! வேண்டியவன்போ லிருந்துகொண்டு சில சந்தர்ப்பங்களில் ஏமாற்றித் திருடுகிறவர்கள் சிலர், எப்பொழுதும் ஏமாற்றித் திருடுகிறவர்கள் சிலர். இவர்களுக்குத் தலைவனுயிருப்பவன் இரண்டுவிதமாயும் மோசம் செய்வதில் பிரசித்தி பெற்றவனு யிருக்கவேண்டும். அவ்விதத் தலைவன் உருவமாய் நீரிருப்பதால் அவர்கள் என்னை உபத்திரவிக்காம லிருப்பதற்காக உம்மை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

நமொ-நிவெஙவெவஸிவஙாயாஙண்ாநாம-வ-தயெநமஃ

𑌨𑌿𑌚𑍇𑌰𑌵𑍇 — திருடுவதற்காக நன்கு அலைகிற வரும்

𑌪𑌰𑌿𑌚𑌰𑌾𑌯 — நான்கு பக்கங்களிலும் சஞ்சரிப்பவரும்

𑌆𑌰𑌣𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 — காட்டில் வசிக்கும் திருடர்களுக்கு

𑌪𑌤𑌯𑍇 — யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு

𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 — அடிக்கடி நமஸ்காரம்.

ஓ ருத்திரனே! காட்டில் வசிக்கும் திருடன் நான்கு பக்கங்களிலும் அலைந்துகொண்டிருந்தால்தான் மரங்களடர்ந்த இடங்களில் யாத்திரிகர்களைக் கண்டு பிடித்து சொத்துகளை அபஹரிக்க முடியும். அவ்விதத் திருடர்களுக்குத் தலைவனாயிருப்பவன் அலைந்து திருடுவதில் முதல் கக்ஷியில் தேறினவனா யிருக்கவேண்டும். அத்தலைவன் உருவமாய் நீரிருப்பதால் அவர்கள் என்னைப் பிடிக்காம லிருப்பதற்காக உம்மை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

𑌨𑌮𑌃 𑌸𑍃𑌕𑌾𑌵𑌿𑌭𑍍𑌯𑍋 𑌜𑌿𑌘𑌾𑌂𑌸𑌦𑍍𑌭𑍍𑌯𑍋 𑌮𑍁𑌷𑍍𑌣𑌤𑌾𑌂 𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 ।

𑌸𑍃𑌕𑌾𑌵𑌿𑌭𑍍𑌯𑌃 — யந்திரத்தால் தன்னைக் காப்பாற்றிக்கொள்பவரும்

| | |
|---|---|
| ஜிகாம்ஸத்ப்ய: | சத்துருக்களைக் கொல்ல விருப்பமுள்ளவரும் |
| முஷ்ணதாம் | வயல்களில் பயிரிட்டிருக்கும் நெல் முதலியவைகளைத் திருடும் திருடர்களுக்கு |
| பதயே | யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமோ நம: | அடிக்கடி நமஸ்காரம் |

ஓ ருத்திரனே! வயல்களில் பயிரிட்டிருக்கும் நெல் முதலியவைகளைத் திருடும் திருடர்களின் தலைவன் ஆயுதங்களால் தன்னைக் காப்பாற்றிக் கொள்பவனாகவும், எதிரிகளைக் கொல்ல விருப்பமுள்ளவனாகவு மிருப்பான். அவன் உருவமாயும் நீரிருப்பதால் அந்தத் திருடர்கள் எனது வயல்களில் களவு செய்யாம லிருப்பதற்காக உம்மை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன் (எ—து.)

நமோ(அ)ஸிமத்ப்யோ நக்தஞ்சரத்ப்ய: ப்ரக்ருந்தாநாம் பதயே நம: ॥

| | |
|---|---|
| அஸிமத்ப்ய: | கத்தியுள்ளவரும் |
| நக்தஞ்சரத்ப்ய: | ராத்திரியில் சஞ்சரிப்பவரும் |
| ப்ரக்ருந்தாநாம் | கொலைசெய்து அபஹரிக்கிற திருடர்களுக்கு |
| பதயே | யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமோ நம: | அடிக்கடி நமஸ்காரம். |

ஓ ருத்திரனே; கொலைசெய்தே திருடுவதென்று வழக்கம் வைத்திருக்கும் திருடர்களுக்குத் தலைவனு யிருப்பவன் கத்தியுள்ளவனுகவும், ராத்திரியில் சஞ்சரிப் பவனுகவுமிருப்பான். அவன் உருவமாயும் நீரிருப்பதால் அவர்கள் என்னைக் கொல்லாமலிருப்பதற்காக உம்மை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன் (எ—து)

நம உஷ்ணீஷிணே கிரிசராய குலுஞ்சானாம் பதயே நமோ நம: ||

| | |
|---|---|
| உஷ்ணீஷிணே | தலைப்பாகை யுடையவரும் |
| கிரிசராய | மலைகளில் சஞ்சரிப்பவரும் |
| குலுஞ்சானாம் | பூமியை அபஹரிக்கும் திருடர்களுக்கு |
| பதயே | யஜமானருமான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமோ நம: | அடிக்கடி நமஸ்காரம். |

பூமியை அபஹரிக்கும் திருடர்கள், கிராமத்தில், திருடனென்று சந்தேஹிப்பதற்கு இடமில்லாமல் தலைப் பாகை முதலிய வெளிஆடம்பரங்களுடன் வஸிப்பவர்க ளென்றும், மலைமுதலிய பிரவேசிக்கமுடியாத இடங் களில் வசிப்பவர்களென்றும் இரண்டுவிதமா யிருக்கிறார் கள். முதல் கூறியவர்கள் தங்களுடைய செழிப்பில் லாத பூமியை செழிப்புவாய்ந்ததாகக் கூறிப்பிறரை வாங் ச்செய்து அவர்களின் செழிப்பான நிலத்தை அபஹக

ரித்துக்கொள்ளுகிறார்கள். இரண்டாவதாகக் கூறியவர்கள் காட்டிற் கருகாமையிலிருக்கும் பிறர் பூமிகளை பலாத்காரமாய்க் கைப்பற்றுகிறார்கள். அவ்விரண்டு திருடர்களுக்கும் தலைவன் ரூபமாய் நீரிருப்பதால் அவர்களின் துன்பம் ஏற்படாமலிருக்க உம்மை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.

‘‘நமோ ஹிரண்யபாஹவே’’ என்ற மந்திரம் முதல் இதுவரையில் 21 மந்திரங்களால் ‘‘ஸர்வாத்மா ஸர்வலோகாதிபதி:’’ என்ற சுருதி பிரஸித்தமான ஸர்வாத்மத்வத்தை ஸ்ரீ ருத்திரனிடம் நிரூபணம் செய்து, இனி ஸர்வரக்ஷகராயும் இவரே யிருக்கிறார் என்றதை நிரூபணம்செய்ய ஆரம்பிக்கிறார்.

நம இஷுக்ருத்ப்யோ தந்வக்ருத்ப்யஶ்ச வோ நமோ நம: ॥

| | |
|---|---|
| இஷுக்ருத்ப்ய: | (லோகத்தைக் காப்பதற்காக)பாணமுள்ளவர்கள் உருவமாயும் |
| தந்வக்ருத்ப்யஶ்ச | வில்லினால் காப்பாற்றுகிறவர்கள் உருவமாயும் (இருக்கிற). |
| வ: | உங்களுக்கு |
| நமோ நம: | அடிக்கடி நமஸ்காரம். |

ஓ ருத்திரனே! தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள் இவர்கள் ரூபமாய் எவ்வளவு சூரர்கள் லோகத்தைக் காப்பாற்றுவதற்காக அம்பையும் வில்லையும் கையில்

வைத்துக்கொண்டிருக்கிறார்களோ, அவ்வளவு பேர்களும் உங்களது அம்சம் பொருந்தினவர்களாகையால் அவர்கள் ரூபமாயிருக்கும் தங்களை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். உலகிலுள்ள எல்லாப் பொருள்களிலும் பகவான் வாஸம் செய்வதால் அந்தந்த பொருள்கள் ரூபமாகவே ஸ்ரீ ருத்திரன் இருப்பதாய்க்கருதி வணங்கப்படுவதாய் மேல் மந்திரங்களிலும் அறியவேண்டும்.

நம ஆதந்வாநேப்ய: ப்ரதிததாநேப்யஶ்ச வோ நமோ நம: ।

| | |
|---|---|
| ஆதந்வாநேப்ய: | தனுஸ்ஸில் ஞாண்கயிற்றைக் கட்டுகிறவர்கள் ரூபமாயும் |
| ப்ரதிததாநேப்யஶ்ச | கட்டப்பட்ட ஞாண்கயிற்றில் பாணத்தைத் தொடுப்பவர்கள் ரூபமாயும் (இருக்கிற) |
| வ: | உங்களுக்கு |
| நமோ நம: | அடிக்கடி நமஸ்காரம். |

குறிப்பு.—ஸ்ரீ ருத்திராம்சம் வாய்ந்த ருத்திரகணங்கள் கணக்கிலடங்காமலிருப்பதால் அவர்களை சம்போதனம்செய்து வணங்குகிற அபிப்ராயத்தால் "வ:" என்று பஹுவசனம் போடப்பட்டதாய்க் கருதவேண்டும். அல்லது அதிகமான மரியாதையை காண்பிப்பதற்காகவாவது பஹுவசனம் போடபபட்டதாய் அறியவேண்டும். இவ்வபிப்ராயத்தையே மேல்மந்திரங்களிலும் கொள்ளவேண்டும்.

16390

𑌨𑌮 𑌆𑌯𑌚𑍍𑌛𑌦𑍍𑌭𑍍𑌯𑍋 𑌵𑌿𑌸𑍃𑌜𑌦𑍍𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌆𑌯𑌚𑍍𑌛𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 | ஞாண் கயிறை இழுக்கிறவர்கள் ரூபமாயும் |
| 𑌵𑌿𑌸𑍃𑌜𑌦𑍍𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | பாணத்தை விடுகிறவர்கள் ரூபமாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம் |

𑌨𑌮𑍋𑌽𑌸𑍍𑌯𑌦𑍍𑌭𑍍𑌯𑍋 𑌵𑌿𑌧𑍍𑌯𑌦𑍍𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ॥

| | |
|---|---|
| 𑌅𑌸𑍍𑌯𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 | பாணத்தை லக்ஷ்யபர்யந்தம் போகும்படி செய்கிறவர்கள் ரூபமாயும் |
| 𑌵𑌿𑌧𑍍𑌯𑌦𑍍𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | லக்ஷ்யத்தில் தைக்கும்படி செய்கிறவர்கள் ரூபமாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮 𑌆𑌸𑍀𑌨𑍇𑌭𑍍𑌯𑌃 𑌶𑌯𑌾𑌨𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ॥

| | |
|---|---|
| 𑌆𑌸𑍀𑌨𑍇𑌭𑍍𑌯𑌃 | உட்கார்ந்திருப்பவர்கள் உருவமாயும் |
| 𑌶𑌯𑌾𑌨𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | படுத்துக்கொண்டிருப்பவர்கள் உருவமாயும் (இருக்கிற) |

| | |
|---|---|
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮𑌃 𑌸𑍍𑌵𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑍋 𑌜𑌾𑌗𑍍𑌰𑌦𑍍𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌸𑍍𑌵𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 | தூங்குகிறவர்கள் ரூபமாயும் |
| 𑌜𑌾𑌗𑍍𑌰𑌦𑍍𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | விழித்துக் கொண்டிருப்பவர்கள் உருவமாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮𑌸𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌦𑍍𑌭𑍍𑌯𑍋 𑌧𑌾𑌵𑌦𑍍𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌤𑌿𑌷𑍍𑌠𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 | நின்றுகொண்டிருப்பவர்கள் ரூபமாயும் |
| 𑌧𑌾𑌵𑌦𑍍𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | ஓடுகிறவர்கள் ரூபமாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮𑌸𑍍𑌸𑌭𑌾𑌭𑍍𑌯𑌃 𑌸𑌭𑌾𑌪𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌸𑌭𑌾𑌭𑍍𑌯𑌃 | ஸபையிலிருப்பவர்கள் உருவமாயும் |
| 𑌸𑌭𑌾𑌪𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | அக்கிராஸனாதிபதிகள் ரூபமாயும் (இருக்கிற) |

𑌵𑌃 — உங்களுக்கு
𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 — அடிக்கடி நமஸ்காரம்

𑌨𑌮𑍋 𑌅𑌶𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑍋𑌽𑌶𑍍𑌵𑌪𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ॥

𑌅𑌶𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 — குதிரைகள் உருவமாயும்
𑌅𑌶𑍍𑌵𑌪𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 — குதிரைகளுக்கு யஜமானர்கள் உருவமாயும் (இருக்கிற)
𑌵𑌃 — உங்களுக்கு
𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 — அடிக்கடி நமஸ்காரம்.

𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌾𑌨𑍁𑌵𑌾𑌕𑌃

𑌨𑌮 𑌆𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌨𑍀𑌭𑍍𑌯𑍋 𑌵𑌿𑌵𑌿𑌧𑍍𑌯𑌨𑍍𑌤𑍀𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

𑌆𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌨𑍀𑌭𑍍𑌯𑌃 — நான்கு பக்கங்களிலும் அடிப்பதற்கு சக்தியுள்ளவர்களும்
𑌵𑌿𑌵𑌿𑌧𑍍𑌯𑌨𑍍𑌤𑍀𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 — அநேகவிதமாய் அடிப்பதற்கு சக்தியுள்ளவர்களுமான ஸ்திரீகள் ரூபமாயும் (இருக்கிற)
𑌵𑌃 — உங்களுக்கு
𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 — அடிக்கடி நமஸ்காரம்

𑌨𑌮 𑌉𑌗𑌣𑌾𑌭𑍍𑌯𑌸𑍍𑌤𑍃𑌂𑌹𑌤𑍀𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

𑌉𑌗𑌣𑌾𑌭𑍍𑌯𑌃 — உத்கிருஷ்டகணங்களான ப்ராஹ்மீ,

ரௌத்ரீ, காளீ, வைஷ்ணவீ, வாராஹீ, ஐந்த்ராணீ, சாமுண்டா, என்ற ஏழு மாதாக்கள் ரூபமாயும்

| | |
|---|---|
| த்ருஹத்ப்ய | ஹிம்ஸிப்பதற்கு சமர்த்தர்களான துர்க்கைமுதலான உக்கிரதேவதைகள் ரூபமாயும் (இருக்கிற) |
| வ: | உங்களுக்கு |
| நமோ நம: | அடிக்கடி நமஸ்காரம். |

நமோ க்ருத்ஸேப்யோ க்ருத்ஸபதிப்யஶ்ச வோ நம: ।

| | |
|---|---|
| க்ருத்ஸேப்ய: | விஷயங்களில் மிகவும் ஆசையுள்ளவர்கள் ரூபமாயும் |
| க்ருத்ஸபதிப்ய | மேற் சொல்லியவர்களுக்கு யஜமானர்கள் ரூபமாயும் (இருக்கிற) |
| வ: | உங்களுக்கு |
| நமோ நம: | அடிக்கடி நமஸ்காரம். |

நமோ வ்ராதேப்யோ வ்ராதபதிப்யஶ்ச வோ நம: ।

| | |
|---|---|
| வ்ராதேப்ய: | பலவகுப்பார் சேர்ந்த கூட்டம் உருவமாயும் |

| | |
|---|---|
| 𑌵𑍍𑌰𑌾𑌤𑌪𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | மேற்சொல்லிய கூட்டத்திற்கு யஜமானர்கள் உருவமாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮𑍋 𑌗𑌣𑍇𑌭𑍍𑌯𑍋 𑌗𑌣𑌪𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌗𑌣𑍇𑌭𑍍𑌯𑌃 | பிரமதகணங்கள் உருவமாயும் |
| 𑌗𑌣𑌪𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | பிரமதகணங்களுக்கு யஜமானர்களான நந்திகேச்வரர் முதலானவர்கள் உருவமாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காறம். |

𑌨𑌮𑍋 𑌵𑌿𑌰𑍂𑌪𑍇𑌭𑍍𑌯𑍋 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌵𑌿𑌰𑍂𑌪𑍇𑌭𑍍𑌯𑌃 | உண்மையில் எவ்விதமான ரூபமுமில்லாதவர்களாயும் |
| 𑌵𑌿𑌶𑍍𑌵𑌰𑍂𑌪𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | உபாசனத்திற்காக கற்பிக்கப்பட்ட அநேகரூபங்களை யுடையவர்களாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

குறிப்பு:—பகவான் உண்மையில் எவ்வித நாம ரூபமு மில்லாதவராயும், உபாசனத்திற்காக கற்பிக்கப் பட்ட நாமரூபங்களை யுடையவராயு மிருப்பதால் அவரை எந்த நாமரூபத்தைக்கொண்டு உபாசித்தாலும் க்ஷேம மடையலாம் என்று இதனால் தெரிகிறது.

𑌨𑌮𑍋 𑌮𑌹𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 𑌕𑍍𑌷𑍁𑌲𑍍𑌲𑌕𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌮𑌹𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 | 𑌅𑌣𑌿𑌮𑌾, 𑌮𑌹𑌿𑌮𑌾, 𑌗𑌰𑌿𑌮𑌾, 𑌲𑌘𑌿𑌮𑌾, 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌃, 𑌪𑍍𑌰𑌾𑌕𑌾𑌮𑍍𑌯𑌂, 𑌈𑌶𑌤𑍍𑌵𑌂, 𑌵𑌶𑌿𑌤𑍍𑌵𑌂, என்ற அஷ்டைச்வர்ய முள்ளவர்கள் உருவமாயும் |
| 𑌕𑍍𑌷𑍁𑌲𑍍𑌲𑌕𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | அஷ்டைச்வர்ய மில்லாத எளிய வர்கள் உருவமாயும்(இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம் |

𑌨𑌮𑍋 𑌰𑌥𑌿𑌭𑍍𑌯𑍋𑌽𑌰𑌥𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌰𑌥𑌿𑌭𑍍𑌯𑌃 | நல்ல வண்டி முதலியவைகளை யுடையவர்கள் உருவமாயும் |
| 𑌅𑌰𑌥𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | வண்டி யில்லாதவர்கள் உருவமா யும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம் |

𑌨𑌮𑍋 𑌰𑌥𑍇𑌭𑍍𑌯𑍋 𑌰𑌥𑌪𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌰𑌥𑍇𑌭𑍍𑌯𑌃 | (நல்ல)வண்டிகள் உருவமாயும் |
| 𑌰𑌥𑌪𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | (நல்ல)வண்டிகளின் யஜமானர்கள் உருவமாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்சளுக்கு |
| 𑌨𑌮𑍋𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮𑌸𑍍𑌸𑍇𑌨𑌾𑌭𑍍𑌯𑌃 𑌸𑍇𑌨𑌾𑌨𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌸𑍇𑌨𑌾𑌭𑍍𑌯𑌃 | சைங்யங்கள் உருவமாயும் |
| 𑌸𑍇𑌨𑌾𑌨𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | சைங்யத்தின் தலைவர்கள் உருவமாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮𑌃𑌕𑍍𑌷𑌤𑍍𑌤𑍃𑌭𑍍𑌯𑌸𑍍𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑍃𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌕𑍍𑌷𑌤𑍍𑌤𑍃𑌭𑍍𑌯𑌃 | வண்டியை ஓட்டுகிறவர்கள் உருவ உருமாயும் |
| 𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑍃𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | வண்டியை நெருத்து கிறவர்கள் வமாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮𑌸𑍍𑌤𑌕𑍍𑌷𑌭𑍍𑌯𑍋𑌰𑌥𑌕𑌾𑌰𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌤𑌕𑍍𑌷𑌭𑍍𑌯𑌃 | தச்சர்கள் உருவமாயும் |
| 𑌰𑌥𑌕𑌾𑌰𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | வண்டியை உண்டுபண்ணுகிறவர்கள் உருவமாயும், அல்லது ரதகாரன் என்ற ஜாதியில் பிறந்தவர்கள் உருவமாயும் (இருக்கிற) (வைச்யஜாதி ஸ்திரீனியிடத்தில் க்ஷத்திரியன் பீஜத்திற்குப் பிறந்தவனுக்கு 'மாஹிஷ்யன்' என்று பெயர். சூத்திர ஜாதி ஸ்திரீயினிடத்தில் வைச்யனுடைய பீஜத்திற்கு பிறந்த பெண்குழந்தைக்கு "கரணீ" என்று பெயர். அந்தக் கரணினிடம் மாஹிஷ்யன் பீஜத்திற்குண்டானவனுக்கு ரதகாரன் என்றுபெயர் என்று ஸ்மிருதிகளில் விரிவாய் கூறப்பட்டிருக்கிறது. |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮𑌃 𑌕𑍁𑌲𑌾𑌲𑍇𑌭𑍍𑌯𑌃 𑌕𑌰𑍍𑌮𑌾𑌰𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌕𑍁𑌲𑌾𑌲𑍇𑌭𑍍𑌯𑌃 | குயவர்கள் உருவமாயும் |
| 𑌕𑌰𑍍𑌮𑌾𑌰𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | கம்மாளர்கள் உருவமாயும் (இருக்கிற) |

| | |
|---|---|
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮𑌃 𑌪𑍁𑌞𑍍𑌜𑌿𑌷𑍍𑌟𑍇𑌭𑍍𑌯𑍋 𑌨𑌿𑌷𑌾𑌦𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌪𑍁𑌞𑍍𑌜𑌿𑌷𑍍𑌟𑍇𑌭𑍍𑌯𑌃 | பக்ஷிகளின் கூட்டங்களை அடிப்பவர்கள் உருவமாயும் |
| 𑌨𑌿𑌷𑌾𑌦𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | (நாயை அடித்து சாப்பிடும்) வேடர்கள் உருவமாயும்(இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮 𑌇𑌷𑍁𑌕𑍃𑌦𑍍𑌭𑍍𑌯𑍋 𑌧𑌨𑍍𑌵𑌕𑍃𑌦𑍍𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌇𑌷𑍁𑌕𑍃𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 | பாணத்தை உண்டுபண்ணுகிறவர்கள் உருவமாயும் |
| 𑌧𑌨𑍍𑌵𑌕𑍃𑌦𑍍𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | தனுஸ்ஸை உண்டுபண்ணுகிறவர்கள் உருவமாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮𑍋 𑌮𑍃𑌗𑌯𑍁𑌭𑍍𑌯𑌃 𑌶𑍍𑌵𑌨𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌮𑍃𑌗𑌯𑍁𑌭𑍍𑌯𑌃 | வேடர்கள் உருவயாயும் |
| 𑌶𑍍𑌵𑌨𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | நாயின்கழுத்தில் கயிரைக்கட்டி இழுத்துச் செல்பவர்கள் உருவமாயும் (இருக்கிற) |

| | |
|---|---|
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

𑌨𑌮𑌃 𑌶𑍍𑌵𑌭𑍍𑌯𑌃 𑌶𑍍𑌵𑌪𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌵𑍋 𑌨𑌮𑌃 ।

| | |
|---|---|
| 𑌶𑍍𑌵𑌭𑍍𑌯𑌃 | நாய்கள் ரூபமாய் இருப்பவர்களாயும் |
| 𑌶𑍍𑌵𑌪𑌤𑌿𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 | நாய்களுக்கு யஜமானர்கள் உருவமாய் இருப்பவர்களாயும் (இருக்கிற) |
| 𑌵𑌃 | உங்களுக்கு |
| 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 | அடிக்கடி நமஸ்காரம். |

குறிப்பு:---உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களிலும் ஸ்ரீ ருத்திரனிருப்பதால் நாய், குதிரை, குயவன் முதலியவர்களாயும் அவரே இருக்கிறார் என்று நிருபணம் செய்து இதுவரைம் நமஸ்காரம் செய்யப்பட்டது. இனி வருமனுவாகங்களில் செய்யப்பட்டிருக்கும் இது போன்ற நமஸ்காரத்திற்கும் இக்கருத்தையே எடுத்துக் கொள்ளவேண்டும்.

। 𑌅𑌥 𑌪𑌞𑍍𑌚𑌮𑍋𑌽𑌨𑍁𑌵𑌾𑌕𑌃 ।

இவ்வனுவாகத்தில் ஸ்ரீ ருத்திரன் அஸாதாரண மஹிமாநுஸந்தான பூர்வமாய் நமஸ்கரிக்கப் படுகிறார். அதிலும் முதலிலிருக்கும் இரண்டு மந்திரங்களால் ஸ்ரீ

ருத்திரன், ஸிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், பந்தம், மோக்ஷம், இவைகளைச் செய்கிறாரென்று நிரூபித்து வணங்கப்படுகிறார்.

நமோ ஹவாயவ ரு-ஒ-ாயவ

| | |
|---|---|
| ஹவாயவ | ஜகத்திற்கு காரணமா யிருக்கிற ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமஃ | நமஸ்காரம் |
| ரு-ஒ-ாயவ | ஸம்ஸார துக்கத்தை விறட்டுகிறவ ராயு மிருக்கிற ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமஃ | நமஸ்காரம் |

நமஃ ஶவ-ாயவ வஶ-வ-தயெவ

| | |
|---|---|
| ஶவ-ாயவ | (பிரளய காலத்தில்) எல்லாவற்றையும் சம்ஹரிக்கிற ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமஃ | நமஸ்காரம் |
| வஶ-வ-தயெவ | ஸம்ஸாரபாசத்தால் கட்டுண்ட ஜீவர்களைக் காப்பாற்றுகிற ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நமஃ | நமஸ்காரம். |

ஸவ-ஃஇஂ ஸ-ஹவிஷு-ரு-ஒெ-நு-ரெஸஸஂஸ-ஸ-ஒ யஜெ (இந்த எல்லா உலகமும்,பிரும்மா, விஷ்ணு, குணி ருத்திரன்,இந்திரன் முதலியவர்களும் துரீயமூர்த்தியான

மஹாதேவனிடமிருந்து உண்டாகிறார்கள்) என்றபடி ஸ்ரீ ருத்திரன் ஜகத்காரணமாயிருக்கிறா ரென்றும், யதா சர்மவதாகாசம் வேஷ்டயிஷ்யந்தி மானவா:। ததா சிவமவிஜ்ஞாய து:கஸ்யாந்தோ பவிஷ்யதி, ஸம்ஸாரகம் த்யுஹஸ்ராவஷ்ட. (எப்பொழுது மனிதர்கள் தோலைப் போல ஆகாசத்தை சுருட்டுவார்களோ, அப்பொழுது தான் சிவனை உபாசிக்காமல் சாம்சாரிக துக்க நிவிருத்தியை யடைவார்கள், ஸ்ரீ ருத்திரன் மோக்ஷ சாதனமான பிரணவத்தை உபதேசிக்கிறார்.) என்றபடி ஸ்ரீ ருத்திரன் மோக்ஷத்தைக் கொடுப்பவரா யிருக்கிறாரென்றும், தஸ்மா உபஸம்ஹர்த்ரே மஹாக்ராஸாய நம:। (எல்லா பிரபஞ்சத்தையும் ஸம்ஹரிப்பவராயும், பெரியகபளமுள்ளவராயும், (பிரளயகாலத்தில் எல்லாப் பொருள்களையும் ஒரே சமயத்தில் நாசம் செய்கிறவராயும்) இருக்கிற பகவானுக்கு நமஸ்காரம்) என்றபடி ஸ்ரீ ருத்திரன் பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் சம்ஹரிப்பவரா யிருக்கிறாரென்றும், பசுபதி என்ற பதத்திற்கு சம்சார பாசத்தால் கட்டுப்பட்ட ஜீவர்களைக் காப்பாற்றுகிறவர் என்று அர்த்தமாதலால், பந்தம், பாலனம் இவைகளையும் ஸ்ரீ ருத்திரனே செய்கிறாறென்றும் சென்ற இரண்டு மந்திரங்களிலுள்ள ஸ்வாய, ருத்ராய, பவாய, பசுபதயே என்ற பதங்களால் கூறப்பட்டது.

குறிப்பு.—இனி வரும் மந்திரங்களையும், ஒவ்வொரு பதத்தினுடைய அர்த்தத்தின் முடிவில் "ஸ்ரீ

ருத்திரனுக்கு" என்ற பதத்தையும், "நமஃ" என்ற பத த்தை சேர்த்துக்கொண்டு அதன் பொருளையும் கிரஹித் துக்கொண்டு வியாக்யானம செய்துகொள்ளவேண்டும். ஒவ்வொருபதத்தினுடனும் நமஃ என்றபதம் சேரவேண் டும் என்பதற்காகவே மந்திரங்களில் அடிக்கடி வகாரம் போடப்பட்டிருக்கிறது.

நமோ நீலக்ரீவாய ச ஶிதிகண்டாய ச

| | |
|---|---|
| நீலக்ரீவாய ச | காளகூட விஷத்தால் கருத்த கழுத்தையுடைய— |
| ஶிதிகண்டாய ச | காளகூடத்தை சாப்பிடுவதற்கு முன் வெளுத்த கழுத்தையுடைய, அல்லது மற்ற பாகங்களில் வெளுத்த கழுத்தையுடைய— |

சுத்த ஸ்படிகம்போலுள்ள தனது சமுகத்தில் காளகூட விஷத்தால் ஏற்படக்கூடிய கருப்பையும் கவனியாமல் உலகம் ரக்ஷிக்கப்படவேண்டுமென்றதை மட்டும் பிரதானமாக் கருதி காளகூட விஷத்தை உட்கொண்ட ஸ்ரீ ருத்திரனுடைய ஸஹாநுபூதிஃஸ்வபாவம் விஸ்வம் (பூஜ்யரான ருத்திரனே இவ்வுலகத்தைக் குறித்து தயவை செலுத்துகிறீர்) என்றதால் கூறப்பட்டது. அசாதாரண தயையானது இதனால் வெளியிடப்பட்டது.

நம: கபர்திநே ச வ்யுப்தகேசாய ச

கபர்திநே ச — கபர்த்தம் என்ற ஜடாபாரத்துடன் கூடின—

வ்யுப்தகேசாய ச — தலையில் மயிரில்லாத பரமஹம்ஸ பரிவ்ராஜகரூபமா யிருக்கிற—

தக்ஷபிரஜாபதியின் யாகத்தை நாசஞ்செய்த வீரபத்திரனை வெளியிட்ட ஜடாபாரத்துடன் கூடினவரா யிருக்கிறார் என்று சொன்னதால் தேவா வை யஜ்ஞாத்ருத்ரமந்தராயந், ஸ யஜ்ஞமவித்யத் (தேவர்கள் யாகத்திலிருந்து ருத்திரனை விலக்கினார்கள், அவர் யாகத்தை நாசம்செய்தார்) என்ற வேறு வேத வாக்யங்களால் கூறப்பட்ட "தக்ஷபிரஜாபதியாக நாசனம்" என்ற ஸ்ரீ ருத்திர லீலையும், சிகையில்லாத தத்தாத்ரேயர், துர்வாஸர் முதலிய பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியர்கள் ரூபமாய் ஸ்ரீ ருத்திரனிருப்பதாய்க் கூறப்பட்டதால் ப்ரஹ்மாதிபதி: ப்ரஹ்மணோதிபதி: (வேதத்திற்கு யஜமானர். பிரும்ம தேவனுக்கும் யஜமானர்) என்ற வாக்யத்தால் சொல்லப்பட்ட வேதாந்த சாஸ்திரத்தைப் பரவச்செய்யும் தன்மையும் இதனால் வெளியிடப்பட்டது.

நம: ஸஹஸ்ராக்ஷாய ச சததந்வநே ச

ஸஹஸ்ராக்ஷாய ச — ஆயிரக் கணக்கான கண்களையுடைய—

ஶதயந்வநேவ நூற்றுக்கணக்கான வில்லுகளேயு

டையவ—

இதனால் "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" (எந்த பகவான் எல்லாவற்றையும் பொதுவா யறிந்தவரோ, எல்லாவற் றையும் தனித்தனியா யறிந்தவரோ) என்ற சுருதி பிர ஸித்தமான "எல்லாவற்றையு மறிந்திருப்பது" என்ற ஸ்ரீ ருத்திரனின் மஹிமையும், 'ஸ தயோக்த ஸ்தயா ருத்ர: க்ருத்வா விஷ்ணும் ஸாயகோத்தமம் । ஶல்யமக்நிம் ததா க்ருத்வா தநுர் மேரும் மஹேஶ்வர: । க்ருத்வா ப்ரணவமேவாத்ர ஜ்யாம் ஸாவித்ரீம் மஹேஶ்வர: ।' (அந்தருத்திரன் அவ்விதம் சொல்லப்பட்டவராய்க்கொண்டு அவ்விதமே ஆகட்டுமென்று சொல்லி விஷ்ணுவைச் சிறந்தபாணமாக ச்செய்து அக்கினியை பாணத்தின் நுனியாகச்செய்து, மஹாமேருவை வில்லாகச் செய்துகொண்டார். பிரண வத்தை (இரண்டாவது) தனுஸ்ஸாக செய்து ஸாவித்ரி யை ஞாண்கயிறாகச் செய்துகொண்டார்) என்று மஹா பாரதத்தில் சொல்லியபடி ஸ்ரீ ருத்திரன் வேதம், பிர ணவம், மேரு, பினாகம், முதலிய அநேகம் வில்லுகளே யுடையவரா யிருக்கிறார் என்பதும், அதனால் "தேஷா மஸுராணாம் திஸ்ர: புர ஆஸந்" (அந்த அசு ரர்களுக்கு மூன்று பட்டினங்கள் இருந்தன) என்று வேதப்பிரசித்தமான "த்ரிபுராசுரர்களைக் கொல்வது" என்ற அவரது லீலையும் காண்பிக்கப்பட்டது.

நமோ கிரிஶாய ச ஶிபிவிஷ்டாய ச

| | |
|---|---|
| கிரிஶாய ச | கைலாசம் என்ற மலையையுடைய (கைலாசத்தி லிருக்கிற) |
| ஶிபிவிஷ்டாய ச | நாராயணன் ரூபமாயிருப்பவரான |

இதனால் ஸ்ரீ ருத்திரனும் விஷ்ணுவும் ஒருவரே என்றும், அவர்களைத் தனிப்பட்டவர்களாய் நினைப்பது பிசகென்றும் தெரிவிக்கப்பட்டது.

நமோ மீடுஷ்டமாய சேஷுமதே ச

| | |
|---|---|
| மீடுஷ்டமாய ச | மற்றவர்களைக்காட்டிலும் அதிகமாய் அபீஷ்டங்களை வர்ஷிப்பவரான— |
| இஷுமதே ச | பிரசித்திபெற்ற பாணத்தையுடைய— |

இதனால் ஸ்ரீ ருத்திரன் மற்றவர்களைக்காட்டிலும் அபீஷ்டங்களை அதிகமாய் கொடுப்பவரென்றும், ஆதலால் அவரைநாம் உபாசிக்க வேண்டுமென்றும், அக்கினி முதலியவைகளை நுனி முதலியவைகளாயுடைய சிறந்தபாணமுள்ளவரா யிருப்பதால், மற்றவர்களால் செய்யமுடியாத த்ரிபுராசுர ஸம்ஹாரம் முதலிய கார்யங்களைச் செய்யும் சக்திவாய்ந்தவ ரென்றும் வெளியிடப்பட்டது.

நமோ ஹ்ரஸ்வாய ச வாமநாய ச ।

| | |
|---|---|
| ஹ்ரஸ்வாய ச | சிறிய சரீரமுடைய— |

MAHAMAHUPADHYAYA
Dr. U.V. SWAMINATHA IYER LIBRARY
TIRUVANMIYUR :: MADRAS 41



வாமநாய ச — குட்டையான கை, கால், முதலிய அவயவங்களையுடைய மஹா கண பதியின் ரூபமாயிருப்பவரான—

இதனால் சிறிய ஹிருதயாகாசத்தில் சிறிய வடிவத்துடன் ஸ்ரீ ருத்திரன் உபாசிக்கப்படுகிறாரென்றும், மஹாநாராயணோபநிஷத் என்று கூறியபடி சகல ஜீவர்களுக்கும் யஜமானராயிருக்கிறாரென்றும் தெரிவிக்கப்பட்டது.

16390

நமோ ப்ருஹதே ச வர்ஷீயஸே ச

ப்ருஹதே ச — இடம், காலம், பொருள் இவைகளாலளவிட முடியாதவரான—

வர்ஷீயஸே ச — கல்யாணகுணங்களால் நிறைந்தவரான—

நமோ வ்ருத்தாய ச ஸம்வ்ருத்வனே ச ।

வ்ருத்தாய ச — (மற்றவர்களைக் காட்டிலும் வயதால்) பெரியவரான—

ஸம்வ்ருத்வனே ச — அசாதாரண ஸ்துதி நமஸ்காரங்களால் கௌரவிக்கத் தகுந்தவரான—

இதனால், [illegible] (எவன் மற்றவர்களைக்காட்டிலும் விசேஷ சக்தி வாய்ந்தவனோ அவன் நமஸ்கரிக்கத் தகுந்தவன். அவன் ருத்திரனைக்காட்டிலும் வேறு யார் எனக்கு முன்னால் விரலை நீட்டலாம். பரமேச்வரன் யாரைப் பூஜித்திருக்கிறார். எவர்களால்தான் பரமேச்வரன் பூஜிக்கப்படவில்லை) என்று சொல்லியபடி எல்லோராலும் ஸ்ரீ ருத்திரன் பூஜிக்கத் தகுந்தவரென்றும், அதிலும் ஸ்துதி பூஜை இவைகளை செய்யுங்காலத்தில் மற்றதேவதைகளுக்கொப்பாக நினைத்து நடந்துகொள்வது தவறென்றும், மற்றவர்களை காட்டிலும் விசேஷஸ்துதி நமஸ்காரங்களைச் செய்யவேண்டுமென்றும் தெரிவிக்கப்பட்டது "[illegible]" (எல்லாதேவர்களாலேயும் நமஸ்கரிக்கப்பட்ட ஓ ருத்திரனே! தப்பு ஸ்தோத்திரத்தாலோ, மற்றவர்களுக்கொப்பிட்டு ஸ்துதிசெய்வதாலோ, மற்றவர்களை கூப்பிடுவதுபோல் தங்களைக் கூப்பிடுவதாலோ, தங்களை நாங்கள் கோபமூட்டப் புகுந்தோமில்லை.) என்று மற்றோரிடத்தில் கூறப்பட்டிருப்பதிலிருந்தும் ஸ்ரீ ருத்திரனை மற்றவர்களைப்போல் நினைப்பது பிசகென்ற அபிப்பிராயம் நன்கு விளங்கும்.

நமோ ஹ்ரஸ்வாய ச வாமநாய ச

அக்ரியாய ச — (உலகமுண்டாவதற்கு) முன்னிருப்பவரான—

பூர்வஜாய ச — உலகத்தை சிருஷ்டித்த பிரும்மதேவனுக்கும் முன்னிருப்பவரான—

ஹிரண்யகர்ப்ப: ஸமவர்த்ததாக்ரே (உலகம் உண்டாவதற்குமுன் பிரும்மதேவன் உண்டானார்) என்று வேறு வேதவாக்யங்கள் கூறுவதால் பிரும்மதேவனும் உலகமுண்டாவதற்குமுன் இருந்தவராக ஆகிறார். ஆதலால் ஜகத் உண்டாவதற்கு முன்னிருக்கிறார் என்று சொன்னால் போதாதென்று பூர்வஜாய என்ற பதம் போடப்பட்டது. இதனால் 'ஹிரண்யகர்ப்பம் ஜநயாமாஸ பூர்வம்' (முதலில் பிரும்மதேவனை உண்டுபண்ணினார்) என்று சொல்லப்பட் டிருப்பதால் ஸ்ரீ ருத்திரன் பிரும்மதேவனை உண்டுபண்ணினா ரென்றும், பிரும்மதேவனுக்கும் காரணமான ஸ்ரீ ருத்திரனே முக்கிய ஜகத்காரணமென்றும் இதனால் தெரிவிக்கப்பட்டது.

நம ஆசவே சாஜிராய ச

ஆசவே ச — (உலகமெங்கும்) வியாபித்திருப்பவரான—

அஜிராய ச — போவதில் சமர்த்தரான—

எந்த இடத்திற்கும் போவதற்கு சக்தியுள்ளவராக இருப்பதால் ஸ்ரீ ருத்திரன் ஜகத்வ்யாபியாகிறார். இதனால்

யோ ருத்3ரோ அப்ஸு, என்ற ச்ருதி பிரஸித்தமான ஜகத்வ்யாபித்வமானது தெரிவிக்கப்பட்டது.

நம: சீ²க்⁴ரியாய ச சீ²ப்⁴யாய ச

| | |
|---|---|
| சீ²க்⁴ரியாய ச | வேகமாய் ஓடும் ஜலத்தில் அந்தர்யாமியா யிருப்பவரான— |
| சீ²ப்⁴யாய ச | (அதிகமான) பிரவாஹத்தி லிருப்பவரான— |

நம ஊர்ம்யாய சாவஸ்வந்யாய ச।

| | |
|---|---|
| ஊர்ம்யாய ச | அலைகளி லிருப்பவரான— |
| அவஸ்வந்யாய ச | சத்தமில்லாத ஜலத்தி லிருப்பவரான— |

நம ஸ்ரோதஸ்யாய ச த்³வீப்யாய ச

| | |
|---|---|
| ஸ்ரோதஸ்யாய ச | சிறிய பிரவாஹத்தி லிருப்பவரான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நம: | நமஸ்காரம் |
| த்³வீப்யாய ச | தீவுகளி லிருப்பவரான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நம: | நமஸ்காரம் |

ஸ்ரீ ருத்திரன் எங்குமந்தர்யாமியா யிருக்கிறார் என்றதை நிரூபணம் செய்யப்போகு மிடத்தில், நமோ நா

த்³ர்யாய ச, வைஶந்தாய ச, நம꞉ கூப்யாய ச அவட்யாய ச, நமோ வர்ஷ்யாய ச அவர்ஷ்யாய ச, என்ற மந்திரங்களால் ஸ்ரீ ருத்திரன் பலவித ஜலங்களில் அந்தர்யாமியா யிருக்கிறுரென்று சொல்லப்படப் போகிறுர். ஆதலால் மறுபடியும் இங்கு சொன்னதிலிருந்து சொன்னதை திருப்பி சொல்வதென்ற தோஷம் பிரசங்கிக்கலாம். ஆகிலும் ஆபோ வா இத³ம் ஸர்வம் என்று வேதத்தால் கூறப்பட்ட ஜலத்தின் மஹிமையாவும் அதில் அந்தர்யாமி ரூபமாயிருக்கும் ஸ்ரீ ருத்திரனுடையதே என்று காண்பிப்பதற்காக பகவந் மஹிமா நிரூபணம் செய்யுமிடத்தில் திருப்பி மறுபடியும் சொல்லப்பட்டதாய்க் கருதவேண்டும். இதனுல் ஸ்வாஶேஷமஹிமாநம் விபூ⁴திம் ஸம்யம்யேஶ்வரா꞉” என்று சொல்லியபடி விசித்திரமாயும், கணக்கிட முடியாமலு மிருக்கிற சக்திகளையுடைய பரமேச்வரனுடைய ஒரு சக்தியானது ஜலத்திற்கு கௌரவத்தை கொடுக்கிறது என்றும், எல்லாத் திவ்யகளிலிருக்கும் எல்லா அதிசயங்களும் அவ்விடத்தி லந்தர்யாமியா யிருக்கும் ஸ்ரீ ருத்திரனுடையதே என்றும் அறிந்துகொள்ளவேண்டும்.

அத² ஷஷ்டோ²(அ)நுவாக꞉ ।

**அவதாரிகை.**—இவ்வனுவாகத்தில் ஸ்ரீ ருத்திரன் எல்லா ரூபமாயும் எல்லாவற்றிலு மந்தர்யாமியாயு மிருக்கிறுர் என்று நிரூபணம் செய்து நமஸ்கரிக்கப் படுகிறுர்.

நமோ ஜ்யேஷ்டா²ய ச கநிஷ்டா²ய ச

| | |
|---|---|
| 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌾𑌯 | வயது, வித்தை, ஆசிரமம் இவைகளால் மேன்மையை யடைந்தவர்களின் ரூபமா யிருப்பவரான— |
| 𑌕𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌯 | மேற்சொல்லியவைகளால் குறைந்தவர்களின் ரூபமாயிருக்கிற. |

𑌨𑌮𑌃 𑌪𑍂𑌰𑍍𑌵𑌜𑌾𑌯 𑌚𑌾𑌪𑌰𑌜𑌾𑌯

| | |
|---|---|
| 𑌪𑍂𑌰𑍍𑌵𑌜𑌾𑌯 | காரணரூபமா யிருப்பவரான— |
| 𑌅𑌪𑌰𑌜𑌾𑌯 | கார்யரூபமா யிருப்பவரான— |

𑌨𑌮𑍋 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌯 𑌚𑌾𑌪𑌗𑌲𑍍𑌭𑌾𑌯

| | |
|---|---|
| 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌯 | யௌவனப் பருவமுள்ளவன் ரூபமாயிருப்பவரான— |
| 𑌅𑌪𑌗𑌲𑍍𑌭𑌾𑌯 | பாலன் ரூபமாயிருப்பவரான— |

𑌨𑌮𑍋 𑌜𑌘𑌨𑍍𑌯𑌾𑌯 𑌬𑍁𑌧𑍍𑌨𑌿𑌯𑌾𑌯

| | |
|---|---|
| 𑌜𑌘𑌨𑍍𑌯𑌾𑌯 | பின்பாகத்தி லந்தர்யாமியா யிருப்பவரான— |
| 𑌬𑍁𑌧𑍍𑌨𑌿𑌯𑌾𑌯 | வேர் முதலிய ஆதாரஸ்தானங்களில் அந்தர்யாமியா யிருப்பவரான |

குறிப்பு:—இதுமுதல் இவ்வனுவாகம் முடியுப்வரையிலும் அந்தந்த இடங்களில் பரமேச்வரன் அந்தர்யாமியா யிருக்கிறார் என்று சொல்லப்படுவதாய் கருதவேண்டும்.

𑌨𑌮𑌃 𑌸𑍋𑌭𑍍𑌯𑌾𑌯 𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌸𑌰𑍍𑌯𑌾𑌯 𑌚

𑌸𑍋𑌭𑍍𑌯𑌾𑌯 — 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇𑌨 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌲𑍋𑌕𑌂 𑌨𑌯𑌤𑌿 𑌪𑌾𑌪𑍇𑌨 𑌪𑌾𑌪𑌮𑍍 𑌉𑌭𑌾𑌭𑍍𑌯𑌾𑌮𑍇𑌵 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 (அதிக புண்யத்தால் தேவசரீரத்தை யடைகிறான். அதிக பாபத்தால் பசு, பக்ஷி முதலிய சரீரத்தை யடைகிறான். இரண்டின் சமபாகத்தால் மனிதசரீரத்தை யடைகிறான்) என்று கூறியபடி சமமானபுண்யபாபங்களையுடைய மனித சரீரத்திலிருப்பவரான—

𑌪𑍍𑌰𑌤𑌿𑌸𑌰𑍍𑌯𑌾𑌯 — (ஓரிடம்விட்டு மற்றோரிடத்துக்கு ஸ்வதந்திரமாய் போகிற) ஜங்கம பிரபஞ்சத்தி லிருப்பவரான—

𑌨𑌮𑍋 𑌯𑌾𑌮𑍍𑌯𑌾𑌯 𑌚 𑌕𑍍𑌷𑍇𑌮𑍍𑌯𑌾𑌯 𑌚

𑌯𑌾𑌮𑍍𑌯𑌾𑌯 𑌚 — யமனுடைய சரீரத்தி லிருப்பவரான—

𑌕𑍍𑌷𑍇𑌮𑍍𑌯𑌾𑌯 𑌚 — ஸ்வர்க்கலோகத்தி லிருப்பவரான

𑌨𑌮 𑌉𑌰𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌯 𑌚 𑌖𑌲𑍍𑌯𑌾𑌯 𑌚

𑌉𑌰𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌯 𑌚 — எல்லாப் பயிர்களாலேயும் செழிப்பான பூமியிலிருப்பவரான—

𑌖𑌲𑍍𑌯𑌾𑌯 𑌚 — களத்திலிருப்பவரான—

𑌨𑌮𑌃 𑌶𑍍𑌲𑍋𑌕𑍍𑌯𑌾𑌯 𑌚𑌾𑌵𑌸𑌾𑌨𑍍𑌯𑌾𑌯 𑌚

𑌶𑍍𑌲𑍋𑌕𑍍𑌯𑌾𑌯 𑌚 — (வேத மந்திரங்களால்) துதிக்கத் தகுந்தவரான—

𑌅𑌵𑌸𑌾𑌨𑍍𑌯𑌾𑌯 𑌚 — உபநிஷத்துக்களால் நிர்ணயிக்கப் படுபவரான—

𑌨𑌮𑍋 𑌵𑌨𑍍𑌯𑌾𑌯 𑌚 𑌕𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌯 𑌚

𑌵𑌨𑍍𑌯𑌾𑌯 𑌚 — காட்டிலிருப்பவரான—

𑌕𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌯 𑌚 — புதர்களிலிருப்பவரான—

𑌨𑌮𑌃 𑌶𑍍𑌰𑌵𑌾𑌯 𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌶𑍍𑌰𑌵𑌾𑌯 𑌚

𑌶𑍍𑌰𑌵𑌾𑌯 𑌚 — கேட்கக்கூடிய சப்தரூபமா யிருப்பவரான—

ப்ரதிஶ்ருதாய ச — எதிரொலி ரூபமாயிருப்பவரான—

நம ஆஶுஷேணாய சாஶுரதாய ச

ஆஶுஷேணாய ச — சீக்கிரமாய்ச் செல்லும் சைந்யத்தை யுடையவன் உருவமாயிருக்கிற—

ஆஶுரதாய ச — சீக்கிரமாய் ஓடும் தேரையுடையவன் உருவமாயிருக்கிற—

நமஶ் ஶூராய சாவபிந்ததே ச

ஶூராய ச — சௌர்யமுள்ளவன் உருவமாயிருக்கிற—

அவபிந்ததே ச — (ஸந்மார்க்கத்வேஷிகளை) சிக்ஷிப்பவன் உருவமாயிருக்கிற—

நமோ வர்மிணே ச வரூதினே ச

வர்மிணே ச — கவசத்துடன் கூடியவன் உருவமாயிருக்கிற—

வரூதினே ச — தேர்ப்பாகனை காப்பாற்றக்கூடிய இடத்துடன் கூடியவன் ரூபமாயிருக்கிற (பண்டைய காலத்து தேர்களில், சாரதிக்கு ஏதாகிலும் ஆபத்து நேரிடும்போலிரு

ந்தால் அவனை அதனின்றும் காப்பாற்றுவதற்காக தேர் தட்டில் ஓர் இடம் தனியாய் ஏற்படுத்தப்பட்டிருக்கும். அது இங்கே வரூதம் என்ற பதத்தால் சொல்லப்படுகிறது.)

𑌨𑌮𑍋 𑌬𑌿𑌲𑍍𑌮𑌿𑌨𑍇 𑌚 𑌕𑌵𑌚𑌿𑌨𑍇 𑌚

| | |
|---|---|
| 𑌬𑌿𑌲𑍍𑌮𑌿𑌨𑍇 | துவாரத்துடன்கூடின யுத்தத்தில் தலையைக் காப்பாற்றும் தலைப்பாகையோடு கூடினவன் உருவமாயிருக்கிற— |
| 𑌕𑌵𑌚𑌿𑌨𑍇 | சரீரத்தை காப்பாற்றுகிற சட்டையோடு கூடினவன் உருவமாயிருக்கிற— |

𑌨𑌮𑌃 𑌶𑍍𑌰𑍁𑌤𑌾𑌯 𑌚 𑌶𑍍𑌰𑍁𑌤𑌸𑍇𑌨𑌾𑌯 𑌚

| | |
|---|---|
| 𑌶𑍍𑌰𑍁𑌤𑌾𑌯 | பிரசித்தி பெற்றவன் ரூபமாயிருக்கிற ஸ்ரீ ருத்திரனுக்கு |
| 𑌨𑌮𑌃 | நமஸ்காரம் |
| 𑌶𑍍𑌰𑍁𑌤𑌸𑍇𑌨𑌾𑌯 | பிரசித்தி பெற்ற ஸைந்யத்துடன் கூடியவன் ரூபமாயிருக்கிற ஸ்ரீ ருத்திரனுக்கு |
| 𑌨𑌮𑌃 | நமஸ்காரம். |

குறிப்பு:—தேவர்கள், அசுரர்கள், கந்தர்வர்கள், மனிதர்கள், இவர்களில் ஸஹமாநாய என்று ஆரம்பித்து த்ருதபதயே நம என்ற வரையிலும் சொல்லிய லக்ஷணம் பொருந்தியவனாய் எவனிருக்கிறானோ அவன் ரூபமாய் ஸ்ரீ ருத்திரனிருப்பதாய்க் கருதி நமஸ்காரம் செய்யப்பட்டதாய் அறியவேண்டும்.

। ஸப்தமோऽநுவாக꞉ ।

அவதாரிகை.—கீழ்ச் சென்ற அநுவாகத்தைப் போல் இவ்வநுவாகத்திலும் ஸ்ரீ ருத்திரன் ஸர்வாத்மாவென்றும், ஸர்வாந்தர்யாமி என்றும் நமஸ்கரிக்கப்படுகிறார்.

நமோ து³ந்து³ப்⁴யாய சாஹநந்யாய ச

து³ந்து³ப்⁴யாய — துந்துபி என்ற வாத்தியத்திலிருப்பவரான—

ஆஹநந்யாய — அவ்வாத்யத்தை அடிப்பதற்குச் சாதனமான கம்பிலிருப்பவரான—

நமோ த்⁴ருஷ்ணவே ச ப்ரம்ருஶாய ச

த்⁴ருஷ்ணவே — யுத்தத்தில் பின்காட்டி யோடாமல் எதிர்த்து நிற்கிறவன் ரூபமாயிருப்பவரான—

ப்ரம்ருஶாய — எதிராளியின் ஸைந்யத்தின் நிலைமையை நன்கு ஆலோசிப்பவன் உருவமாயிருப்பவரான—

நமோ தூதாய ச ப்ரஹிதாய ச

தூதாய — பிறர் அபிப்பிராயத்தை மற்றவர்களுக்குத்தெரியாமலறிந்துகொண்டு தெரிவிப்பதில் சமர்த்தன் ரூபமாயிருப்பவரான—

ப்ரஹிதாய — யஜமானனால் கார்யத்தில் ஏவப்பட்டவன் உருவமாயிருப்பவரான (யஜமானனின் கார்யத்தை சுறுசுறுப்பாய் செய்கிறவன் ரூபமாயிருப்பவரான)—

நமோ நிஷங்கிணே சேஷுதிமதே ச

நிஷங்கிணே — (நல்ல) கத்தியுள்ளவன் ரூபமாயிருப்பவரான—

இஷுதிமதே — (குறையாத) பாணங்களுடன் கூடின அம்பராத்தூணியுள்ளவன் ரூபமாயிருப்பவரான—

நமஸ் தீக்ஷ்ணேஷவே சாயுதிநே ச

தீக்ஷ்ணேஷவே — கூர்மையான பாணங்களுள்ளவன் ரூபமாயிருப்பவரான—

ஆயுதினே (பலவிதமான) ஆயுதமுள்ளவன் ரூபமா யிருப்பவரான—

நமஸ்ஸ்வாயுதாய ச ஸுதன்வனே ச

ஸ்வாயுதாய உலகத்திற்கு க்ஷேமத்தைக் கொடுக்கும் ஆயுதமுள்ளவன் ரூபமா யிருப்பவரான—

ஸுதன்வனே ஜகத்திற்கு க்ஷேமத்தைக் கொடுக்கும் தனுஸ்ஸை யுடையவன் ரூபமாயிருப்பவரான—

நமஸ்ஸ்ருத்யாய ச பத்யாய ச

ஸ்ருத்யாய (காலால் நடந்துபோவதற்கு மாத்திரம் யோக்யமான) ஒத்தையடிப் பாதையி லிருப்பவரான—

பத்யாய வண்டி போவதற்குத் தகுதியான ராஜ வீதியி லிருப்பவரான—

நம: காட்யாய ச நீப்யாய ச

காட்யாய கொஞ்சமாய் ஓடும் ஜலமுள்ள இடத்தி லிருப்பவரான—

நீப்யாய அருவிவிழுமிடத்திலிருப்பவரான

𑌨𑌮𑌃 𑌸𑍂𑌦𑍍𑌯𑌾𑌯 𑌚 𑌸𑌰𑌸𑍍𑌯𑌾𑌯 𑌚

𑌸𑍂𑌦𑍍𑌯𑌾𑌯 — சேறுள்ள இடத்தி லிருப்பவரான
𑌸𑌰𑌸𑍍𑌯𑌾𑌯 — குளம், குட்டைகளிலிருப்பவரான

𑌨𑌮𑍋 𑌨𑌾𑌦𑍍𑌯𑌾𑌯 𑌚 𑌵𑍈𑌶𑌨𑍍𑌤𑌾𑌯 𑌚

𑌨𑌾𑌦𑍍𑌯𑌾𑌯 — ஆறுகளி லிருப்பவரான—
𑌵𑍈𑌶𑌨𑍍𑌤𑌾𑌯 — சிறிய குளங்களி லிருப்பவரான—

𑌨𑌮𑌃 𑌕𑍂𑌪𑍍𑌯𑌾𑌯 𑌚𑌾𑌵𑌟𑍍𑌯𑌾𑌯 𑌚

𑌕𑍂𑌪𑍍𑌯𑌾𑌯 — கிணற்றி லிருப்பவரான—
𑌅𑌵𑌟𑍍𑌯𑌾𑌯 — பொந்தி லிருப்பவரான—

𑌨𑌮𑍋 𑌵𑌰𑍍𑌷𑍍𑌯𑌾𑌯 𑌚𑌾𑌵𑌰𑍍𑌷𑍍𑌯𑌾𑌯 𑌚

𑌵𑌰𑍍𑌷𑍍𑌯𑌾𑌯 — மழையி லிருப்பவரான—
𑌅𑌵𑌰𑍍𑌷𑍍𑌯𑌾𑌯 — மழை இல்லாமையிலிருப்பவரான

**குறிப்பு:**—இதனால் காலங்களில் மழை பெய்து தேசம் சுபிக்ஷமாவதற்கும், ஜனங்களின் பாப கர்மத்தை முன்னிட்டு அவ்வித மில்லாமல் தேசம் துர்ப்பிக்ஷமடைவதற்கும் கர்மபல தாதாவான ருத்திரனே காரணமென்று ஏற்படுகிறது.

𑌨𑌮𑍋 𑌮𑍇𑌘𑍍𑌯𑌾𑌯 𑌚 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑍍𑌯𑌾𑌯 𑌚

| | |
|---|---|
| மேக்⁴யாய ச | மேகத்தி லிருப்பவரான— |
| வித்³யுத்யாய ச | மின்னலி லிருப்பவரான— |

நம ஈத்⁴ரியாய சாதப்யாய ச

| | |
|---|---|
| ஈத்⁴ரியாய ச | (நிர்மலமாய் பிரகாசிக்கும்) சரத் கால மேகத்தி லிருப்பவரான— |
| ஆதப்யாய ச | வெய்யலி லிருப்பவரான— |

நமோ வாத்யாய ச ரேஷ்மியாய ச

| | |
|---|---|
| வாத்யாய ச | காற்றி லிருப்பவரான— |
| ரேஷ்மியாய ச | (எல்லா பூதங்களும் நாசத்தை யடையும் ஸமயமான) பிரளய காலத்தி லிருப்பவரான— |

நமோ வாஸ்தவ்யாய ச வாஸ்துபாய ச

| | |
|---|---|
| வாஸ்தவ்யாய ச | பசு கன்று முதலிய பொருள்களி லிருப்பவரான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நம: | நமஸ்காரம் |
| வாஸ்துபாய ச | வீடு கட்டுவதற்கு வேண்டிய பூமியை (மனையை) காப்பாற்றிக் கொண்டிருப்பவரான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| நம: | நமஸ்காரம் |

𑌏𑌕𑌾𑌦𑌶𑌾𑌨𑍁𑌵𑌾𑌕𑌃

அவதாரிகை.—இவ்வனுவாகத்தில் ஸ்ரீ ருத்திரன் எல்லோராலேயும் அவச்யமாய் உபாஸிக்கத் தகுந்தவர் என்பதை ஸ்தாபிப்பதற்காக மற்றவர்களுக்கில்லாத குணங்களையும், எல்லாப் பொருள்களினு மந்தர்யாமியா யிருக்கிறார் என்பதையும் நிரூபணம்செய்து நமஸ்கரிக்கப்படுகிறார். அதிலும் முதல் மந்திரத்தால் பரமேச்வரனே மோக்ஷத்தைக் கொடுப்பவரா யிருப்பதால் மோக்ஷத்தை யடைய விரும்பும் யாவராலும் ஸ்ரீ ருத்திரன் அவசியம் உபாஸிக்கத் தகுந்தவர் என்று நிரூபணம்செய்து நமஸ்கரிக்கப்படுகிறார்.

𑌨𑌮 𑌸𑍋𑌮𑌾𑌯 𑌚 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌯 𑌚

| | |
|---|---|
| 𑌸𑍋𑌮𑌾𑌯 𑌚 | (தனது சித்சக்தியான) பார்வதியுடன் கூடினவரான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| 𑌨𑌮𑌃 | நமஸ்காரம் |
| 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌯 𑌚 | ஸம்ஸார துக்கத்தை விரட்டுகிறவரான ஸ்ரீ ருத்திரனுக்கு |
| 𑌨𑌮𑌃 | நமஸ்காரம். |

𑌯𑌦𑌾𑌚𑌰𑍍𑌮 𑌵𑌦𑌾𑌕𑌾𑌶𑌂 𑌵𑍇𑌷𑍍𑌟𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿𑌮𑌾𑌨𑌵𑌾𑌃 ।
𑌤𑌦𑌾 𑌶𑌿𑌵𑌮𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌯 𑌦𑍁𑌃𑌖𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑍋 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿
(இதர்க்கர்த்தம் 𑌨𑌮𑍋 𑌭𑌵𑌾𑌯 𑌚 என்ற இடத்தில் கூறப்

பட்டிருக்கிறது.) என்று கூறப்பட்டிருப்பதால் ஸ்ரீருத்திரனை ஆராதனம்செய்து அவரை நேரில் காணாதவரையிலும் ஒருவருக்கும் மோக்ஷம் கிடைக்காது. ஏனென்றால், அஜ்ஞானத்தைக் காரணமாயுடைய இந்த ஸம்ஸாரம் பிரும்மஞானம் அன்னியில் விலகாது. அந்த பிரும்மஞானம் பரப்பிரும்ம வித்யாதி தேவதையான பார்வதியின் அனுக்கிரஹமன்னியில் ஏற்படாது. இவ்விஷயம் ஶ்வேதாச்வதரோபனிஷத்திலும், ஶைவபுராணங்களிலும் நன்கு விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது. அவ்வித மஹிமைதங்கிய பார்வதீ தேவியானவள் ஸ்ரீ ருத்திரனுடைய சித்சக்தியாக ஆகிறாள். அப்பேர்ப்பட்ட பார்வதீ தேவியுடன் பரமேச்வரன் எப்பொழுதும் கூடியிருப்பதால் அவரை உபாஸிப்பவர்களுக்கு நிச்சயமாய் பிரும்மஞானமுண்டாகி மோக்ஷமேற்படும் என்று ஏற்படுகிறது. ஆதலால் மோக்ஷமடைய விருப்பமுள்ளவர்கள் ஸ்ரீ ருத்திரனை உபாஸித்தே தீரவேண்டும். மேலுமிதனால் பார்வதீதேவியுடனேயே பரமேச்வரனை உபாஸிக்கவேண்டுமென்றும் அறியப்படுகிறது. ஆதலால்தான் கைவல்யோபனிஷத்தில் "உமாஸஹாயம் பரமேஶ்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரஶாந்தம்" என்றதால் பரமேச்வரனை பார்வதீ தேவியுடன் கூடினவராய் த்யானம் செய்பவர்கள் மோக்ஷமடைவார்கள் என்றும், ஸ்காந்தத்தில், "பார்வதீ பரமாதேவீ ப்ரஹ்மவித்யா ப்ரதாயிநீ। தஸ்யா ஸஹாயோ பகவாந் ப்ராஹ்மீவிப்ராதிஶேஷிதம்। தேஷாம் ப்ராப்திர் விநிஶ்சிதா தேஷாம் ஸித்திர் நசாந்யேஷாம்" (மேலான தெய்வாமன பார்வதியான

வள் ஆத்ம ஞானத்தைக் கொடுப்பவளா யிருக்கிறாள். ஆதலால் பரமேச்வரனின் சித்சக்தியான பார்வதியுடன் ஹிருதய கமலத்தில் பரமேச்வரனை எவர்கள் த்யானம் செய்கிறார்களோ அவர்களுக்குத்தான் மோக்ஷம் ஏற்படும், மற்றவர்களுக்கு ஏற்படாது என்று வேதம் கூறுகிறது.) என்றதால் ஸ்பஷ்டமாய் பரமேச்வரனை பார்வதியுடன் உபாஸிப்பவர்களுக்கே மோக்ஷம் ஏற்படும் என்றும் கூறப்பட்டிருக்கிறது. ஆதலால் மோக்ஷத்தை விரும்புவோர்கள் ஸ்ரீ ருத்திரனை பார்வதியுடன் உபாஸிக்க வேண்டுமென்று இதனால் தெரிவிக்கப்பட்டது.

அவதாரிகை.—சூரியன் ரூபமாய் எல்லோராலேயும் பார்க்கக்கூடியவராய் முன்வந்து தன்னை உபாஸிப்பவர்களுக்கு எல்லாவிதமான நன்மைகளைச் செய்கிறபடியினாலேயும் ஸ்ரீ ருத்திரன் கட்டாயமா யுபாஸிக்கத் தகுந்தவர் என்று இரண்டாவது மந்திரத்தால் கூறப்படுகிறது.

நமஸ்தாம்ராய சாருணாய ச

தாம்ராய ச — உதயகாலத்தில் மிகவும் சிவந்த நிறமுள்ள சூரியன் ரூபமாயிருப்பவரான—

அருணாய ச — அதற்கு பிறகு கொஞ்சம் சிவப்பு நிறமுள்ள சூர்யன் ரூபமாயிருப்பவரான—

நமஶ்ஶங்காய ச பஶுபதயே ச

ஶங்காய — சுகத்தை அடையும்படி செய்பவ ரான

பஶுபதயே — (பிரம்மா முதல் ஸ்தம்பம் (சிறிய பூச்சி) வரையிலுமுள்ள சகல ஜீவர்களையும் காப்பாற்றுகிறவ ரான

இதனால் பசுக்களைப்போல் ஸ்வாதந்திரிய மில்லாமல் சம்சாரபாசத்தால் கட்டுப்பட்டுக் கிடக்கும் சகல ஜீவர்களையும் காப்பாற்றுகிறவராய் ஸ்ரீ ருத்திரனிருப்பதால், அவரே அனைவரையும் சுகத்தையடையும்படி செய்பவரென்றும், சுகத்தை விரும்புவோர்கள் அவரை உபாஸிக்க வேண்டுமென்றும் கூறப்பட்டது.

நம உக்ராய ச பீமாய ச

உக்ராய — (எல்லாவற்றிற்கும்) மேலானவ ரான—

பீமாய — பயத்தை உண்டு பண்ணுகிறவ ரான—

பீஷாஸ்மாத் வாதஃ பவதே (இந்த பிரம்மத்தினிடமிருந்து பயத்தால் காற்று வீசுகிறது) என்று கூறியபடி அதிக சக்திவாய்ந்த இந்திராதி தேவர்களும் எந்த பக

